# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விகாரி – சித்திரை – 2019 – ஏப்ரல்

82

நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரிப் பட்டயமளிப்புவிழா

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விகாரி - சித்திரை - 2019 - ஏப்ரல் இதழ் - 82

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்

இடப்பங்கில் உமைஇருக்க இடையிலொரு மகனிருக்க
எம்மிதயம் தானிருந்தே என்றும் காக்கும்
இயல்புடைய பெருமானுக் கேற்ற நங்காய்!
மடப்பிடியே! திருநெல்லை என்கின்ற மயிலே! உன்
மனமிருக்கும் அடியவரில் நானும் உள்ளேன்
மாமுனிவர் வந்துதொழக் கோவி லூராம்
இடத்தமர்ந்த ஏந்திழையே! எங்கள்குடி காப்பவளே!
இறைமறவா ஆண்டவரும் தினம் வணங்க
இருக்கின்ற ஆலயத்தில் இருக்கும் தாயே!
படத்தலைய நாகத்தில் படுத்திருப்பான் பின்பிறந்த
பாவையுமை நீயென்று பார்ப்போர் கூடிப்
பணிந்திடவே அருள்புரிவாய்! பணிய லாமே.




*– காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்*

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்**

2019 ஆம் ஆண்டு பிறந்து 5 மாதங்கள் கடந்து விட்டன. 2019 - 20 கல்வியாண்டு விரைவில் தொடங்க இருக்கின்றது. நம்முடைய பள்ளிகள் கல்லூரிகளிலே மாணவர் சேர்க்கை தொடங்கி நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

இன்றைய சூழ்நிலையிலே பெற்றோர்கள் தங்களுடைய குழந்தைகளைத் தனியார் மெட்ரிக் / CBSE பள்ளிகளிலே சேர்க்கவே பிரியப்படுகிறார்கள். ஆனால் பலபேருக்குப் பொருளாதாரம் இடம் கொடுக்காத காரணத்தினாலே மிகவும் சிரமப்படுகிறார்கள். தனியார் பள்ளி நிர்வாகிகளோ பள்ளிகளின் வரவிற்குள் செலவுகள் செய்வதில் மிகமிகச் சிரமத்திற்குள்ளாகிறார்கள். ஒரு சில பள்ளிகளைத் தவிர மற்றவை தொடர்ந்து நடத்துவதற்கே சிரமத்திற்குள்ளாகிறார்கள். பொருளாதார இழப்பிற்குள்ளாகிறார்கள்.

நம்மைப் போன்ற தர்ம ஸ்தாபனங்கள் ஓரளவிற்கு நம்மால் முடிந்தவரை மாணவர்களுக்குக் கட்டணச் சலுகை அளித்துப் பொருளாதார இழப்பினை அறக்கட்டளை நிதி மூலமாகச் சரி செய்து கொள்கிறோம். மற்றைய நிறுவனங்கள் அவ்வாறு செய்ய இயலாமையால் சாதாரணச் செலவுகளுக்குக் கூடச் சிரமப்படுகிறார்கள்.

இப்படிப்பட்ட சூழ்நிலையிலே பொருளாதார வசதி படைத்தவர்கள், படிக்கின்ற குழந்தைகளுக்கு ஆதரவளித்து அவர்களை நல்ல சிறப்புடைய குடிமக்களாக உருவாக்குவதற்கு உதவ வேண்டியது அவசியம். பள்ளிக் கல்விக்கு அதிகபட்சம் வருடத்திற்கு ரூ.10,000 உதவியளித்தால் மாணவர்கள் செம்மையாகக் கற்றுத் தேற முடியும். நன்கு சிந்தித்துச் செயல்படுவார்களாக! மாணவர்களுக்குப் பொருளுதவி அளிப்பார்களாக!

***ஸ்ரீ சற்குருநாதன் துணை***

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

பதினெண் சித்தர்களில் இவரும் ஒருவர்; இடைக்காடு என்ற ஊரில் இவர் பிறந்தமையாலும் இடையர் குடியில் பிறந்தமையாலும் இவர் இடைக் காட்டுச் சித்தர் எனப்பட்டார். இடைக்காடு என்பது முல்லை நிலத்தைக் குறிப்பதாகும். இங்குள்ளோர் ஆடு மாடுகளை மேய்த்து வந்தனர். இவர்களை இடையர் என்றும் அழைப்பர். கோனார் என்றும் அழைப்பர்.

இடைக்காடர் என்ற பெயரில் சங்கப் புலவர் ஒருவர் இருந்தார். அவர் இவரினும் வேறானவர்; இவர் பிறந்த இடம் பற்றி இரண்டு விதமான செய்திகள் உள்ளன; மதுரைக்கு உள்ள இடைக்காடோ? அல்லது தொண்டை மண்டலத்தைச் சார்ந்த இடையன் மேடா? சரியாகத் தெரியவில்லை.

இவர் ஆடு மேய்க்கும் தொழிலைச் செய்து வந்தார். ஒரு சமயம் வழக்கம் போல் ஆடு மேய்த்துக் கொண்டிருந்தார். நவ சித்தரில் ஒருவர் அங்கு வந்து இவரிடம் பால் கேட்க இவரும் அவருக்குப் பால் கொடுத்தார். இவரது அன்பைக் கண்ட அச்சித்தர் இவருக்கு ஞானோபதேசம் செய்து மறைந்தார். இதனால் இடையன் சித்தர் ஆனான்.

ஒரு காலத்தில் தமது சோதிட ஞானத்தைக் கொண்டு இன்னும் சிறிது காலத்தில் ஒரு கொடிய பஞ்சம் வரப்போவதைத் தமது ஞானத்தால் அறிந்து முன்னெச்சரிக்கையாக எக்காலத்திலும் வளரக் கூடிய எருக்கிலை போன்றவற்றை உண்ணப்பழக்கினார். குறுவரகு என்ற தானியத்தை மண்ணுடன் சேர்த்துப் பிசைந்து சுவர் எழுப்பிக் குடிசை ஒன்று கட்டினார். அதனால் அரிப்பெடுத்த ஆடுகள் சுவரில் உராய்ந்த போது சிந்திய தானியத்தை உண்டார். இவ்வாறு வரப்போகும் பஞ்சத்துக்குத் தம்மைத் தயார்ப்படுத்திக் கொண்டார்.

கொடிய பஞ்சமும் வந்தது. பஞ்சத்தால் உயிர்களெல்லாம் உணவும் நீரும் இன்றி மாண்டன. ஊரே வெறிச்சோடிக் கிடந்தது. ஆனால் இடைக்காடர் மட்டும் என்றும் போல் தம் ஆடுகளுடன் வாழ்ந்து வந்தார்.

இதனைக் கண்ட ஒன்பான் கோள்களும் வியப்புடன் அந்த இரகசியத்தை அறிவான் வேண்டி இவரிடம் வந்தன.

இடைக்காடரும் அதுகண்டு மகிழ்ந்து அவர்களை நோக்கி, ஒன்பான் கோள்களும் என்னை நோக்கி வந்துள்ளீர்களே? உங்களை உபசரிக்க என்னிடம் ஒன்றும் இல்லையே சரி.

இந்த ஏழையின் குடிசையை நாடி வந்துள்ளீர்களே? என்னிடம் ஒன்றும் இல்லை. இந்த வரகுரொட்டியையும் ஆட்டுப் பாலையும் உண்டு மகிழுங்கள் என்று உபசரித்தார்.

கொடிய பஞ்ச காலத்திலும் பசிக்கு உணவு தந்த இடையனைக் கண்டு மகிழ்ந்து அந்த விருந்தினைப் புசித்தனர். அதனால் வந்த மயக்கத்தால் உறங்கி விட்டனர்.

இதனால் ஒன்பான் கோள்களும் ஒன்றுடன் ஒன்று மாறுபட்டு உலகைப் பஞ்சத்தால் வருத்தும் கிரகங்களை இடைக்காடர் அவைகளை எந்த அமைப்பில் மழை பொழியுமோ? அந்த அமைப்பில் மாற்றிப் படுக்க வைத்து விட்டார்.

வானம் இருண்டது. மேகங்கள் திரண்டு மழை பொழிந்தன. வறட்சி நீங்கியது. கண் விழித்த நவகோள்களும் திடுக்கிட்டன. இடைக்காடர் செய்த அற்புதம் கண்டு வியந்தனர். சித்தரின் அறிவுத் திறனை மெச்சி வேண்டிய வரங்களைக் கொடுத்து மறைந்தனர்.

இடைக்காடரின் புகழ் மண்ணுலகில் மட்டுமல்ல வானுலகிலும் பரவியது. அதுகண்ட தேவர்கள் திருமாலை வழிபடும் அடியவர்களுக்கு ஓர் ஐயம் உண்டாயிற்று. திருமாலின் பத்து அவதாரங்களில் மிகவும் போற்றத் தக்க அவதாரம் எது? என்பதுதான் அது. எனவே அந்த ஐயம் தீர அது எது? என்று சித்தரிடம் கேட்டனர்.

இடைக்காடரோ ஏழை இடையன் இளிச்சவாயன் என்று சொல்லிச் சென்று விட்டார். பதில் சொல்லச் சங்கடப்பட்டுத் தன்னைத் தாழ்த்திக் கொண்டு சென்று விட்டாரே? என்று எண்ணிய தேவர்கள் அவர் கூறியதை எண்ணிப் பார்க்கும் போது அதற்கான விடை புலப்பட்டது.

ஏழை - சக்கரவர்த்தியாகவே பிறந்து ஏழையாகவே வாழ்ந்த இராமாவதாரம்; இடையன் - கிருஷ்ணாவதாரம்.

இளிச்சவாயன் - நரசிம்மர் என்றார். தேவர்கள் அவரது அறிவை எண்ணி அவரைப் புகழ்ந்து சென்றனர். பின்னர் வானம் மழை பொழிந்தது. வறட்சியும் நீங்கியது.

இவர் நெடுங்காலம் திருவண்ணாமலையில் வாழ்ந்து வந்தார் என்ற குறிப்பு உண்டு. அண்ணாமலையாரின் சந்நதிக்குப் பின்புறம் உள்ள அருணை யோகீஸ்வரர் மண்டபமே இடைக்காட்டுச் சித்தரின் ஜீவ சமாதி என்பர். அந்த மண்டபத்துக்குக் கீழே ஒரு விளக்கு எரியும். அங்கு இடைக்காட்டுச் சித்தரின் உருவம் சிலையாக வடிக்கப்பட்டிருக்கும்.

இவர் பாடிய பாடல்களின் எண்ணிக்கை 130; பல்வேறு யாப்புகளில் உள்ள இவரது பாடல்களில் ஆயர்களோடு தொடர்புடைய பல சொற்கள் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். இவரது பாடல்களில் ஆட்டமும் கலந்துள்ளது. நெஞ்சொடு கிளத்தல் பலரொடுகிளத்தல் அறிவொடு கிளத்தல் போன்ற அமைப்புகளும் உண்டு.

சித்தர் என்ற சொல் சித்தி பெற்றவர் என்ற பொருளைக் குறிக்கும். இமயம் ஆசனம் பிராணாயாமம் பிரத்தியாகாரம் தாரணை தியானம் சமாதி முதலான எட்டுவகை யோகங்களின் மூலம் பெருஞ்சித்தி பெற்றவர்கள் ஆவர்.

**எட்டுவகை யோகங்கள் :**

இயமம் – கொல்லாமை வாய்மை கள்ளாமை நியமம் – நியாயமான நல்லறங்களைச் செய்து ஒழுக்க நெறியில் நிற்றல்.

ஆசனம் - உடலைப் பல்வேறு கோணங்களில் நிறுத்திப் பயிற்சி செய்தல்.

பிராணாயாமம் - சுவாசத்தைக் கட்டுப்படுத்தல். பிராணவாயுவைத் தடுத்தல், வாயுவை உட்செலுத்துதல் பின் வெளிவிடுதல்.

பிரத்தியாகாரம் – புலன்கள் வாயிலாகப் புறத்தே செல்லும் மனத்தை உள்ளே நிறுத்திப் பழகுதல்.

தாரணை – பிரத்தியாகாரப் பயிற்சியால் உள்ளுக்கு இழுத்த காற்றை நிலைபெறச் செய்தல்.

தியானம் - மனத்தை ஒரு நிலைப்படுத்தி ஒரே சிந்தனையில் மூழ்குதல்.

சமாதி - மனத்தைக் கடவுளிடம் நிலைபெறச் செய்தல்.

**சித்தர்களின் அறிவியல் ஞானம் :**

சித்தர்கள் கண்டறிந்த வித்தை சிறந்த விஞ்ஞான ஆராய்ச்சியாகும். உலோக வகைகள் உப்பு வகைகள் நச்சு வகைகள் வேர் வகைகள் பட்டை வகைகள் விலங்குகளின் உடலில் உற்பத்தியாகும் கோரோசை முதலியவற்றின் குணங்களை ஆய்வு செய்து பயன்படுத்தி உள்ளனர்.

**சித்தர்களின் நம்பிக்கை :**

மக்களின் உயர்ந்த பட்ச ஆயுள் நூறாண்டுகளே என்ற நம்பிக்கை பலரிடம் உள்ளது. ஆனால் சித்தர்களின் நம்பிக்கை மாறானது. ஆயிரக்கணக்கான ஆண்டுகள் உயிர் வாழலாம் என்பது அவர்களின் நம்பிக்கை காய கல்ப மூலிகைகளை முறையாகத் தெரிந்து உட்கொண்டால் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் நோயின்றி வாழலாம் என்பது சித்தர்கள் கண்ட நெறியாகும். சித்தர்களுக்கு உருவ வழிபாடோ கோயில் குளங்களோ வேதங்களோ சடங்குகளோ இல்லை. மனம் என்ற மாட்டை அடக்க வேண்டும். சினம் என்ற செம்மறியைக் கட்டுப்படுத்த வேண்டும். இனி அவருடைய பாடலைக் காணலாம். முதலில் இறையை வணங்கித் தொடங்குகின்றார். தோற்றமும் முடிவும் இன்றி அனாதியாய் நமக்குத் தீமை செய்கின்ற அண்ணாமலையாரின் சந்நதிக்குப் பின்புறம் உள்ள அருணை யோகேஸ்வரர் மண்டபமே இடைக்காட்டுச் சித்தரின் ஜீவ சமாதி என்பர். அந்த மண்டபத்துக்குக் கீழே ஒரு விளக்கு எரியும். அங்கு இடைக்காட்டுச் சித்தரின் உருவம் சிலையாக வடிக்கப்பட்டிருக்கும்.

சித்தர் என்ற சொல் சித்தி பெற்றவர் என்ற பொருளைக் குறிக்கும். இயமம் நியமம் ஆசனம் பிராணாயாமம் பிரத்தியாகாரம் தாரணை தியானம் சமாதி முதலான எட்டுவகை யோகங்களின் மூலம் பெருஞ்சித்தி பெற்றவர்கள் ஆவர்.

*காப்புச் செய்யுள்*

*ஆதி அந்தம் இல்லாத அனாதியைத்*
*தீ(து) உறும்பவம் தீப்படு பஞ்சுபோல்*
*மே(து) உறும்படி முப்பொறி ஒத்துறக்*
*காத லாகக் கருத்தில் கருதுவோம்.*

பொருள் – தொடக்கமும் முடிவும் இல்லாது அநாதியாய் இருக்கின்ற

தீமை தரும் பிறவிப்பிணியைத் தீயில் பட்ட பஞ்சு அழிவதுபோல் மோதி அழிக்கும்படி செய்கின்ற இறையை அன்புடன் கருத்தில் கொள்ளுவோம். என்பதே இதன் பொருள்.

அடுத்து வருகின்ற பாடல்கள் தாண்டவக் கோனார் என்ற தலைப்பில் பாடுகின்றார்.

தாண்டவராயக் கோனார் கூற்று

*எல்லா உலகமும் எல்லா உயிர்களும்*
*எல்லாப் பொருள்களும் எண்ணரிய*
*வல்லாளன் ஆதி பரம சிவனது*
*சொல்லால் ஆகுமே கோனா ரே* 1

பொருள் - அனைத்து உலகங்களும் அனைத்து உயிர்களும் அனைத்துப் பொருள்களும் எண்ணுதற்கு அரிய வல்லவனாகிய ஆதியாய் விளங்கும் பரமசிவனுடைய சொல்லால் (ஆற்றலால் உண்டாகும். கோனாரே)

*வானியல் போலவயங்கும் பிரமமே*
*சூனியம் என்(று) அறிந்(து) ஏத்தாக்கால்*
*ஊன்இயல் ஆவிக்கு ஒருகதி இல்லையென்று*
*ஓர்ந்து கொள்ளுவீர் கோனாரே* 2

பொருள் - வானிலே (இங்கு வெளியாகிய ஆகாயம்) பிரமமாய் விளங்கும் பரம்பொருளே சூனியம் (அதாவது பாழ்வெளி) என்றறிந்து போற்றாத பொழுது ஊன் பொதிந்து விளங்கும் உயிருக்கு ஒரு கதியும் இல்லை என்பதை ஆராய்ந்து அறிக கோனாரே; முப்பாழும் பாழ் அதற்கு அப்பாலும் பாழ் என்பார் திருமூலர் அதைத் தான் சூனியம் என்று கூறுகின்றார் திருமூலர்.

*முத்திக்கு வித்தான மூர்த்தியைத் தொழுது*
*முத்திக்கு உறுதிகள் செய்யாக்கால்*
*சித்தியும் பத்தியும் சத்தியும் முத்தியும்*
*சேரவாகுமே கோனாரே* 3

பொருள் - வீடுபேறு அடைவதற்கு மூலமான இறைவனை வணங்கி அந்த வீடுபேறு நிலையடைவதற்கான உறுதியை மேற்கொள்ளாவிடில் எண்ணிய முடிக்கும் சித்தியும் இறையின் மேல் கொண்ட பக்தியும்

வீடுபேறு அடைவதற்கான தன்மையும் ஒருசேர உண்டாகும் கோனாரே.

*தொல்லைப் பிறவியின் தொந்தமுற்று அதுவே*
*சோம்பல் அற்றுத் தத்வம் செய்யாக் கால்*
*எல்லையில் கடவுள் எய்தும் பலம்உமக்கு*
*இல்லை என்று எண்ணுவீர் கோனாரே* 4

பொருள் - தொன்று தொட்டு வரும் பிறவியின் தொடர்பால் அதுவே சோம்ப லற்று அதற்கான உறுதி செய்யாவிடில் எல்லையற்ற இறைவனின் அருளால் உண்டாகும் உறுதி உமக்கு இல்லாது போகும் என்பதை எண்ணுவீர் கோனாரே.

*ஆரண மூலத்தை அன்புடனேபரி*
*பூரணமாகவே சிந்தித்து மெய்ஞ்ஞானபர*
*மானந்தக் கோலத்தில் பண்புடனே*
*போதத்தைச் சார்ந்திரும் கோனாரே* 5

பொருள் - வேதத்தின் மூலத்தை அன்புடனே முழுமையாக எண்ணி மெய்யறிவின் தன்மையைச் சிந்தித்து அதனைச் சார்ந்திருப்பீர் கோனாரே

*காலா காலம் கடந்திடும் சோதியைக்*
*கற்பனை கடந்த அற்புதத்தை*
*நூலால் பெரியவர் சொன்ன நுண்பொருளை*
*நோக்கத்தில் காண்பது கோனாரே* 6

பொருள் - காலங்கள் அனைத்தையும் கடந்து நிற்கும் சோதிவடிவான இறைவனை நமது கற்பனைக்கும் எட்டாத கடவுளை அவருடைய அற்புத ஆற்றலை, பெரியவர்கள் சாத்திரங்களின் மூலமாக உரைத்த நுண்பொருளை நம் எண்ணத்தால் காண வேண்டும் கோனாரே

*சொல்லரும் சளக நிட்களம் ஆனதைச்*
*சொல்லினால் சொல்லாமல் கோனாரே*
*அல்லும் பகலும் அகத்தில் இருந்திடில்*
*அந்தகன் கிட்டுமோ கோனாரே* 7

பொருள் - சொல்வதற்கு அரியதான உருவில்லாத இறையைச் சொல்லினால் இல்லத்தில் போற்றிப் பாடாமல் இருந்தால்

அந்தகனாகிய எமன் நம்மை நெருங்குவான். போற்றிப் பாடினால் எமன் நம்மை நெருங்குவானோ? கோனாரே

*சூரியன் வாள்பட்டதுய்ய பனிகெடும்*
*தோற்றம் போல் வெவ்வினை தூள்படவே*
*நாரி இடப்பாகன் தாள்நெஞ்சில் போற்றியே*
*நற்பதி சேர்ந்திடும் கோனாரே* 8

பொருள் - சூரியன் ஒளி பட்ட மாத்திரத்தில் தூய பனியானது நீங்கும். அது போல் நமக்குள்ள வெய்ய வினையானது தூளாகும். ஆதலால் பெண்ணை இடப்பகத்திலே கொண்ட பெருமானின் திருவடிகளை மனத்தால் போற்றி நல்லகதியை அடைந்திடும் கோனாரே

*மும்மலம் நீங்கிட முப்பொறிக்கு எட்டாத*
*முப்பாழ் கிடந்ததாம் அப்பாழைச்*
*செம்மறி ஓட்டிய வேளை அமையத்தும்*
*சிந்தையில் வைப்பீரே கோனாரே* 9

பொருள் - ஆணவம் கன்மம் மாயை என்ற மூன்று மலங்களும் நீங்கிட மனம் வாக்கு காயம் என்ற உடலாகிய முப்பொறிகளுக்கும் எட்டாத உடம்புக்குள் வெற்றிடமாய் உள்ள மூன்றிடமும் கிடக்கின்றது. அந்த வெற்றிடமாகிய பாழிடத்தை நீர் செம்மறி ஆட்டினை ஓட்டிய பொழுதும் மனத்தில் கொள்வீர் கோனாரே.

*பஞ்ச விதமாய்ச் சஞ்சலம் பறக்கப்*
*பற்றுஅற்று நின்றதைப் பற்றி அன்பால்*
*நெஞ்சத்து இருத்தி இரவு பகலுமே*
*நேசித்துக் கொள்ளுவீர் கோனாரே* 10

பொருள் - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்பனவாகிய ஐந்தினால் உண்டாகிய சஞ்சலம் அகலப் பற்றின்றி நின்றதான ஓர் இறையைப் பற்றி அன் பால் நெஞ்சிலே இருத்தி இரவு பகலாக நேசித்து வணங்குவீர் கோனாரே

**நாராயணக் கோனார் கூற்று :**

*சீரார் சிவக்கொழுந்தைத் தெள்ளமுதைச் செந்தேனைப்*
*பாராதி வான்பொருளைப் பஞ்சஉரு ஆனஒன்றைப்*
*பேரான விண்ணொளியைப் பேரின்ப வாரிதியை*
*நேராக எந்நாளும் நெஞ்சிருத்தி வாழ்வேனே* 11

பொருள் - சிறப்புடைய சிவக்கொழுந்தைத் தெளிந்த அமுதத்தைச் செந்நிறத் தேனைப் பூமி முதல் வான் வரை போற்றும் உயர்ந்த பொருளை ஐம் பொறிகளின் வடிவான ஒன்றைப் பெருமைமிகு வானிலே தோன்றும் ஒளியைப் பேரின்பக் கடலை எந்நாளும் என் நெஞ்சிலே இருத்தி வாழ்வேன்.

*கண்ணுள் கருமணியைக் கற்பகத்தைக் காஞ்சனத்தைப்*
*பெண்உருவப் பாதியனை பேசிய முப்பொருளை*
*விண்ணின் அமுதை விளக்கொளியை வெங்கதிரைத்*
*தண்ணளியை உள்ளில் வைத்தச் சாருபம் சாருவனே* 12

பொருள் - கண்ணுக்குள் இருக்கின்ற கருமணி போன்றவனைக் கேட்டவற்றை எல்லாம் தருகின்ற கற்பக மரம் போன்றவனைப் பொன் போன்றவனை, பாதி பெண்ணுருக் கொண்டவனை பேசப்படுகின்ற பசுபதி பாசம் என்ற முப்பொருளாய் விளங்குபவனை வானத்திலுள்ள அமுதமொத்தவனை விளக்கிலே ஒளியாய் இருப்பவனை வெய்ய கதிர்போல இருப்பவனை கருணை வடிவான உள்ளத்திலே சாருபமாகிய கடவுள் உருவை நான் பெறுவேன்.

*மனம் எனும் மாடு அடங்கில் தாண்டவக் கோனேமுத்தி*
*வாய்த்த(து) என்று எண்ணேடா தாண்டவக் கோனே*
*சினம் என்னும் பாம்(பு) இறந்தால் தாண்டவக் கோனே யாவும்*
*சித்தி என்(று) எண்ணேடா தாண்டவக் கோனே* 13

பொருள் - இடைக்காடர் இடையர் ஆதலால் மாடு மேய்ப்பவர் மேய்க்கும் போது இவ்வாறு பாடுவது வழக்கம். அந்த முறையில் கீழ்வரும் கண்ணிகள் அமைந்துள்ளன. மனம் என்கின்ற மாடு துள்ளாமல் அடங்கினால் வீடுபேறு வாய்த்தது என்று எண்ணிக்கொள். கோனே என்கின்ற பாம்பு இறந்தால் அதாவது சினம் வாராத போது உலகில் அனைத்தும் கிடைக்கும் என்பதை அறிக.

*ஆசைஎனும் பசுமாளின் தாண்டவக் கோனே இந்த*
*அண்டம்எலாம் கண்(டு) அறிவாய் தாண்டவக் கோனே*
*ஓசையுள் அடங்குமுன்னம் தாண்டவக் கோனே மூல*
*ஓங்காரம் கண்டறிநீ தாண்டவக் கோனே* 14

பொருள் - ஆசை என்கின்ற பசு என்னும் விலங்கு மாண்டால் இந்த அண்டமானது எத்தகையது என்பதைக் கண்டறிவாய்; ஒலி உள்ளே அடங்கினால் அனைத்திற்கும் மூலமாகிய பிரணவப் பொருளை நீ கண்டறிவாய்.

*மூலப்பகுதிஅறத் தாண்டவக் கோனே உள்ளம்*
*முளைத்தவேர் பிடுங்கேடா தாண்டவக் கோனே*
*சாலக் கடத்(து) இயல்பு தாண்டவக் கோனே மனச்*
*சால்என்றே தேர்ந்(து) அறிநீ தாண்டவக் கோனே 15*

பொருள் - பிரபஞ்சத்துக்குக் காரணமான மாயை நீங்கும் போது உள்ளத்திலே தோன்றிய ஆணவமாகிய வேரைப் பிடுங்கிவிடு. முப்பத்திரண்டில் ஒன்றாகிய கடம் என்ற உபநிடதத்தின் இயல்பை மனத்தினால் மிகுதியாக ஆராய்ந்து அறிவாய்.

*பற்றே பிறப்(பு) உண்டாக்கும் தாண்டவக்கோனே! அதைப்*
*பற்றாது அறுத்துவிடு தாண்டவக் கோனே!*
*சற்றே பிரமத்திசை தாண்டவக்கோனே உன்உள்ளம்*
*சலியாமல் வைக்கவேண்டும் தாண்டவக் கோனே 16*

பொருள் - உலகிலே ஒரு பொருள்மேல் பற்று வைத்தால் அது மீண்டும் மீண்டும் பிறவியை உண்டாக்கும். ஆதலால் அவ்வாறு கொண்ட பற்றினை அறுத்துவிடு. அது பரம்பொருள் மேல் இச்சையை உண்டாக்கும். எனவே சலிப்படையாமல் உன் உள்ளத்தின் உள்ளே அதை வைக்க வேண்டும்.

*அவித்தவித்து முளையாதே தாண்டவக் கோனே பத்தி*
*அற்றவர் கதிஅடையார் தாண்டவக் கோனே*
*செவிதனில் கேளாதமறை தாண்டவக் கோனே குரு*
*செப்பில் வெள்ளியாம் அல்லவோ தாண்டவக் கோனே 17*

பொருள் - அவித்த விதை முளைக்காது. அது போலப் பக்தி அற்றவர் நல்ல கதியை அடைய மாட்டார்கள். குரு கூறுகின்ற வேதங்களைச் செவியால் கேளாதவரைப் பற்றிச் சொன்னால் அது வெள்ளியாம்.

*மாடும் மனைகளும் மக்களும் சுற்றமும் வான்பொருளும்*
*வீடும் மணிகளும் வெண்பொன்னும் செம்பொன்னும்*
*வெண்கலமும்*

*காடும் கரைகளும் கல்லாம் பணியும் கரிபரியும்*
*தேடும்பல பண்டம் நில்லா சிவகதி சேர்மின்களே* 18

பொருள் - மாடு மனை மக்கள் சுற்றம் உணர்ந்த பொருள்கள் வீடு மண்வகை வெள்ளி செம்பு வெண்கலம் காடு கரை கல்லிழைத்த நகைகள் யானை குதிரை மேலும் தேடிய பல பொருள்கள் பிற பண்டங்கள் ஆகியன நில்லா. ஆதலால் சிவகதியைச் சேருங்கள்.

*போம்போம் போக்கியம்போம் போசனம்போம் புன்மைபோம்*
*மோகம்போம் மூர்க்கம்போம் மோசம்போம் - தாகம்போம்*
*வேதமுதல் ஆகமங்கள் மேல(து) என்று பல்கால்*
*ஓது பிரமத்து உற்றக் கால்* 19

பொருள் - போம் போம் அனுபவித்தவை அனைத்தும் போம். வஞ்சனை போம் ஆசை போம் சொல்லப்படும் இறைநிலையைப் பலகாலும் அடைந்த போது மேலே அனைத்தும் போம்.

## அதிமதுர கவிகள் *(தொடர்ச்சி)*

காப்பியக்கவிஞர் நா. மீனவன்

## காளமேகம் - சிலேடைப் பாடல்கள்

இரட்டுற மொழிதல் என்ற தொடர் சிலேடையைக் குறிப்பதாகும். திருமலைராயன் அவைக்களத்தில் இருந்த தண்டிகைப் புலவர்கள் காள மேகத்தைப் பலவாறான சமிக்கைகளைக் கொடுத்துச் சோதித்த பின்னும் திருப்தியடையாமல் சிலபாடச் சொல்லி அவரை மடக்கலாம் என்று கருதிப் பலவாறு கேட்கத் தொடங்கினார். ஒரு புலவர் கேட்கத் தொடங்கினார்.

**ஆமணக்குக்கும் யானைக்கும்**

*முத்(து) இருக்கும் கொம்(பு) அசைக்கும் மூரித்தண்(டு) ஏந்திவரும்*
*கொத்(து) இருக்கும் நேரே குலைசாய்க்கும் - எத்திசைக்கும்*
*தேமணக்கும் சோலைத் திருமலைராயன் வரையில்*
*ஆமணக்கும் மால்யானை யாம்.*

பொருள் - தேன் மணக்கும் சோலைகளை உடைய திருமலைராயனது மலையில் உள்ள மலைச் சாரலில் ஆமணக்கும் பெரிய யானையாகும். அது எவ்வாறு எனில்

**ஆமணக்கு** - வித்துகளோடு கூடிய கிளைகளை அசைத்துக் கொண்டு இருக்கும் பெரிய தண்டுகளை மேலே ஏந்திக் கொண்டிருக்கும்.

பூங்கொத்துக்களை உடையதாய் இருக்கும் வரிசையாகக் குலைகளை உடையதாய் இருக்கும்.

**மால் யானை** – பெரிய யானை முத்துக்களை உடைய கொம்பினை அசைக்கும் பெரிய தண்டுகளை ஏந்தியபடி வரும் மத்தகத்தில் அங்குசத்தால் குத்திய கொத்து இருக்கும். மலையிலே உள்ள வாழைக் குலைகளை உண்பதற்காகச் சாய்க்கும்.

**வைக்கோலுக்கும் யானைக்கும்**

***வாரிக் களத்(து) அடிக்கும் வந்துபின்பு கோட்டைபுகும்***
***போரில் சிறந்து பொலிவாகும் – சீர்உற்ற***
***செக்கோல மேனித் திருமலைராயன் வரையில்***
***வைக்கோலும் மால்யானை யாம்.***

பொருள் – சிறப்புப் பொருந்திய செந்நிற மேனியை உடைய திருமலைராயனது மலைச்சாரலில் வைக்கோல் யானைக்குச் சமமாகும். எவ்வாறு எனில்.

**வைக்கோல்** – அறுவடை செய்யும் போது களத்திற்குக் கொண்டு வந்து வாரிக்களத்து மேட்டில் அடிக்கப்படும். அதன் பின் நெல் சேமிக்கும் கோட்டைக்கு வந்து சேரும். வைக்கோல் போராக்கும் போது சிறந்து விளங்கும்.

**மால் யானை – போர்க் களத்தில் பகைவர்களை வாரி அடிக்கும். பின்பு கோட்டைக்கு வந்து சேரும். போர்த்துறையில் மேம்பட்டதாய் விளங்கும்.**

சொல் அமைதியால் ஒன்றாகவும் பொருள் அமைதியால் இரண்டு மூன்றாகவும் பாடப் படுவன சிலேடை எனப்படும். இவ்வாறு சிலேடை பாடுவதில் வல்லவர் காளமேகப் புலவர். அவர் பாடிய சிலேடைப் பாடல்கள் கீழே வருவன. இவையனைத்தும் திருமலைராயன் அவைப்புலவர்கள் கொடுத்த பொருள்களைச் சிலேடையில் அமைத்துப் பாடியவையே.

**வெற்றிலைக்கும் வேசைக்கும்**

தனக்குப் பகையாக வந்தவரை வென்று தெளிவான புகழ்கொண்ட திருமலை ராயனின் மலைச் சாரலில் வேசைக்கு வெற்றிலை சமமே. எவ்வாறு?

***கொள்ளுகையால் நீரில் குளிக்கையால் மேல்ஏறிக்***
***கிள்ளுகையால் கட்டிக் கிடக்கையால் – தெள்ளுபுகழ்ச்***

***செற்றலரை வென்ற திருமலைரா யன்வரையில்***

***வெற்றிலையும் வேசை ஆமே.***

**வெற்றிலை** - மிகுதியான நீரைப் பெற்று வளர்வதாலும் கொடிபடர்ந்தமரத்தில் ஏறிக் கிள்ளப்படுவதாலும் கட்டுகளாகக் கட்டிக் கிடப்பதாலும்.

**வேசை** - தன்பால் பொருள் தந்து வருவோரை அணைத்து கொள்வதாலும் பின் நீரிலே மூழ்கிக் குளிக்கையாலும் அவள்மேலேறி நகக்குறி படக் கிள்ளுவதாலும் வெற்றிலையும் வேசையும் சமமே.

**கண்ணாடிக்கும் அரசனுக்கும் :**

திருமலைச் சாரலில் கண்ணாடி அரசனுக்குச் சமம். எவ்வாறு?

***யாவருக்கும் ரசனைசெய்(து) யாவருக்கும் அவ்வவராய்***

***பாவனையாய்த் தீ(து) அகலப் பார்த்தலால் - மேவும்***

***எதிரியைத்தன் உள்ளாக்கி ஏற்ற ரசத்தால்***

***சதிர்உறலால் ஆடி அர(சு) ஆம்.***

**கண்ணாடி** - அனைவருக்கும் மகிழ்ச்சியை உண்டாக்கியும் யாவருக்கு அவரவரைக் காட்டும் தன்மையாலும் தீமை நீங்கப் பார்க்கப் படுவதாலும் தன்முன் நிற்போரைக் காட்டிப் பின்புறம் ஏற்றுள்ள ரசத்தால் சிறப்படைதலாலும்.

**அரசன்** - எல்லா மக்களுக்கும் இன்பத்தை உண்டாக்குவதாலும் அவரவர் இயல்பிற்கு ஏற்றவாறு விளங்கியும் நாட்டில் தீமை அகலக் காப்பதாலும் எதிரியை வென்று தனக்கு அடங்கியிருக்கச் செய்வதாலும் நவரசச் சிறப்பினாலும் கண்ணாடியும் அரசனும் சமமே.

**கூத்தியர்க்கும் குரங்குக்கும் :**

திருமலைராயன் மலைச் சாரலில் கூத்தியர்க்குக் குரங்கு சமமாகும். எவ்வாறு?

***ஓட்டம் கடியதால் உள்ளவரை மேவுதலால்***

***சேட்டை எவரிடத்தும் செய்தலால் - நாட்டமுடன்***

***காத்திரத்தில் குட்டிஉறக் கட்டுதலால் தெட்டுதலால்***

***கூத்தியர்க்கு நேராம் குரங்கு***

**கூத்தியர்** - கூத்தியராகிய பெண்களுக்கு உதடு கடிபடுவதாலும் பொருள் உள்ள வரைக் கட்டித் தழுவுதலினாலும் எவரிடத்தும் குறும்பு செய்வதினாலும் விருப்பமுடன் தன்னைத் தழுவுவோர் உடல் தன்னுடலில் பொருந்துவதாலும் அப்பொழுதே அவரைக் கவிழ்க்க வஞ்சனைகள் செய்வதாலும்.

**குரங்கு** - விரைவாக ஓடிக் கொண்டிருக்கும் இயல்புடையதாலும் இங்குள்ள மலைகளில் ஏறிச் செல்லுவதாலும் விருப்பமுடன் குட்டியைத் தன்னுடலால் தழுவிக் கொள்வதாலும் பொருள்களைத் தட்டிப் பறிப்பதாலும் கூத்தியர்க்குக் குரங்கு ஒப்பாகும்.

**குதிரைக்கும் காவிரிக்கும் :**

நாடு எங்கும் புகழும்படியான திருமலைராயனின் மலைச் சாரலில் குதிரைக்குக் காவிரி சமமே எவ்வாறு? எனில்

***ஓடும் சுழிசுத்தம் உண்டாகும் துன்னலரைச்***
***சாடும் பரிவாய்த் தலைசாய்க்கும் நாடு அறியத்***
***தேடு புகழான் திருமலைரா யன்வரையில்***
***ஆடுபரி காவிரிஆ மே.***

**கீரைப்பாத்தி** - மண்கட்டிகளை உடைத்துத் தூளாக்குதலினாலும் வாய்க்கால் வழி மாறி மாறிப் பாய்வதாலும் மண்ணை வெட்டிப் பாத்திகள் ஆக்கும் சிறப்பினாலும் நீர்மடையில் இறுதிவரை சென்று இறுதியில் மறித்துத் திரும்புவதாலும்.

**குதிரைக்கு** - வண்டிகளில் கட்டி ஓட்டப்படுவதாலும் கால் மாறி மாறிப் பாய்ந்து செல்லுவதாலும் எதிரிகளைத் தாக்கிக் கொல்லும் சிறப்பினாலும் போக வேண்டிய இடம் சென்று மீளவும் திரும்பி வருவதாலும் கீரைப் பாத்திக்குக் குதிரை சமமாகும்.

**கதவுக்கும் ஆட்டுக்கும் :**

புகழ்பெற்ற திருமலைராயன் மலைச் சாரலில் ஆடும் கதவும் ஒன்றுக்கு ஒன்று சமமே. எவ்வாறு எனில்?

***செய்யுள் கிடைமறிக்கும் வேர்பலகை இட்டு முட்டும்***
***ஐயம்அற மேல்தாள் அடர்க்குமே - துய்யநிலை***
***தேடு புகழ்வேர் திருமலைரா யன்வரையில்***
***ஆடும் கதவும்நிகர் ஆம்***

**கதவு** - வீட்டின் உட்புறத்தைத் தடுத்து மூடியிருக்கும். பலகை கொண்டு பொருத்திச் செய்யப்படும். அதன் மேல் மூடுவதற்காகத் தாழ்ப்பாள் இருக்கும். அழகான நிலையினை உடைத்தாய் இருக்கும்.

**ஆடு** - வயலில் கிடையாக மறிக்கப்படும். கொம்பினால் பலகைகளை முட்டும் மிகுதியான ஊக்கத்துடன் போரிடும். தூய்மையான இடம் தேடித் தங்கும். எனவே ஆடும் கதவும் சமமே.

**குதிரைக்கும் ஆட்டுக்கும் :**

தேவர்களும் நாடும் நல்ல சோலைகளை உடைய திருமலைராயனின் மலைச் சாரலில் ஆடும் குதிரையும் ஒன்றற்கொன்று சமம். அது எவ்வாறு?

***கொம்பிலையே தீனிதின்னும் கொண்டதன் மேல் வெட்டுதலால்***
***அம்புவியில் நன்னடைய தாதலால் - உம்பர்களும்***
***தேடுநற் சோலைத் திருமலைரா யன்வரையில்***
***ஆடும் குதிரையும்நேர் ஆம்.***

**குதிரை** - இதற்குக் கொம்பு இல்லை. தனக்கு வைக்கப்படும் தீனியைத் தின்னும். போரில் பகைவரை வெட்ட விரும்பும் வீரர்கள் ஏறிச் செல்ல உதவும். அழகிய உலகிலே நல்ல கதியை உடையது.

**ஆடு** - கொம்பில் உள்ள இலைகளையே தீனியாக உட்கொள்ளும். அதன் பின்னர் தீனியை அசைபோடும். ஒன்றைப் பின்பற்றி ஒவ்வொன்றாகச் செல்லும். அத்தகைய அழகான நடையை உடையது. எனவே குதிரைக்கு ஆடு சமமே.

**துப்பாக்கிக்கும் ஓலைச் சுருளுக்கும் :**

இப்பெரிய உலகில் தன்னைப் போற்றிப் பாடாத புலவர்க்கு எப்பொருளும் உதவாத திருமலைராயனின் மலைச்சாரலில் துப்பாக்கியும் ஓலைச்சுருளும் ஒன்றற்கொன்று சமமாகும். எவ்வாறு எனில்

***ஆணி வரைஉறலால் ஆனகுறிப் பேதரலால்***
***தோணக் கருமருந்தைத் தோய்த்திடலால் - நீள்நிலத்தில்***
***செப்பார்க்(கு) உதவாத் திருமலைரா யன்வரையில்***
***துப்பாக்கி ஓலைச் சுருள்.***

**துப்பாக்கி** - இருப்புக் கம்பிகளைத் தன்னிடம் கொண்டிருத்தலாலும் வைத்த குறியினைத் தாக்கி வெற்றி தருவதாலும் மிகுதியான கருமருந்து பொருந்தி இருத்தலாலும்.

**ஓலைச்சுருள்** - எழுத்தாணி கொண்டு எழுதப்படுதலாலும் எழுதப்பட்ட குறிப்பை எழுதுவோன் அறியத் தருவதாலும் எழுதிய எழுத்துக்கள் நன்கு புலப்படக் கருமையைப் பூசுவதாலும் துப்பாக்கியும் ஓலைச்சுருளும் சமமே.

**வானவில் விஷ்ணு வெற்றிலை :**

வான வில்லும் விஷ்ணுவும் வெற்றிலையும் சமம். எவ்வாறு?

*நீரில் உளதால் நிறம்பச்சை யால்திருவால்*
*பாரில் பகைதீர்க்கும் பான்மையால் - சாருமனுப்*
*பல்வினையை மாற்றுதலால் பாரீர் பெருவான*
*வில்விண்டு நேர்வெற் றிலை.*

**வானவில்** - நீரிடத்தில் தோன்றியதாலும் நிறத்திலே பச்சைநிறம் உடைமையாலும் அழகாய் இருப்பதாலும் உலகில் உண்டான வறட்சியை மாற்ற மழை தருவதாலும் உலகில் உள்ள மக்களுக்கு உண்டான துயரங்களை மாற்றுவதாலும்

**விஷ்ணு** - நீரில் பள்ளி கொண்டிருப்பதாலும் மேனி நிறம் பச்சையாலும் திருமகளைப் பெற்றிருப்பதாலும் உலகில் அறநெறிக்கு மாறானவரை அழிக்கும் தன்மையாலும் தன்னைச் சரணடையும் மக்களின் வினைகளை மாற்றி அருள்வதாலும்.

**வெற்றிலை** - நீர்க்கால்களில் தோன்றுவதாலும் பச்சை நிறம் உடைமையாலும் மங்கலப் பொருளாய் இருத்தலாலும் பகை தீர்த்து நட்புக்கு அடையாளமாக விளங்குவதாலும் மக்களின் பல வினைகளைப் போக்குவதாலும் வானவில் விஷ்ணு வெற்றிலை ஒன்றுக்கொன்று சமமே.

**பூசணிக்காயும் பரமசிவனும் :**

பூசணிக்காயும் பரமசிவனும் ஒன்று ஆவர். எவ்வாறு? எனில்

*அடிநந்தி சேர்தலால் ஆகம் வெளுத்துக்*
*கொடியும்ஒரு பக்கத்தில் கொண்டு - வடிவுடைய*
*மாசுணத்தைப் பூண்டு வளைத்தழும்பு பெற்றதனால்*
*பூசணிக்காய் ஈசன்எனப் போற்று.*

**பூசணிக்காய்** - அடியில் பெரிய காம்புடன் விளங்குவதாலும் உடல் வெளுத்து ஒருபுறம் கொடியினைக் கொண்டதாயும் அழகான வெண்மையை மேலே கொண்டு வளைவான தழும்புகளைப் பெற்றிருப்பதாலும்.

**பரமசிவன்** - திருவடியில் நந்தி இருப்பதாலும் திருநீறழிந்து வெள்ளை நிறம் உடைமையாலும் தன் ஒருபாகத்தில் பூங்கொடி போன்ற உமையவளைக் கொண்டிருந்த்தலாலும் சிறந்த பாம்பை அணியாக

அணிந்திருப்பதாலும் தன்மை அம்மை தழுவும்போது அவளுடைய வளைத்தழும்பைப் பெற்றிருப்பதாலும் பூசணிக்காய் பரமசிவனுக்குச் சமமே.

**விநாயகர் முருகன் பரமசிவன் :**

விநாயகர் முருகன் பரமசிவன் இம் மூவரும் சமமே. எவ்வாறு?

***சென்னிமுக மாறுளதால் சேர்கரம் முன்நாலுகையால்***
***இந்நிலத்திற் கோடொன்று இருக்கையால் - மன்னுகுளக்***
***கண்உறுத லானும் கணபதியும் செவ்வேளும்***
***என்அரனும் நேரா வரே.***

**விநாயகர்** - தலையும் முகமும் உடலமைப்பிற்கு மாறுபட்டுள்ளதாலும் துதிக்கை முன்புறம் தொங்கிக் கொண்டிருத்தலாலும் ஒற்றைக் கொம்பு உடையவராய் இருத்தலாலும் நிவேதமாக வெல்லம் உண்பதாலும் (குளக் கரையில் இருப்பதாலும்)

**முருகருக்கு** - முடியும் முகமும் ஆறாக உள்ளமையாலும் பொருந்திய கரங்கள் பன்னிரண்டாய் இருப்பதாலும் குன்றமே இருப்பிடமாய்க் கொண்டிருத்தலாலும் நிலைபெற்ற சரவணப் பொய்கையிலே அவதரித்தமையாலும்.

**பரமசிவன்** - தலையிலே கங்கையாறு உள்ளமையாலும் முன்புறம் ஒளியுடன் கூடிய நான்குகைகள் இருத்தலினாலும் இந்நிலத்தில் முடியான கையிலாச மலை இருத்தலாலும் நிலைபெற்ற நெற்றிக்கண் உடைமையாலும் விநாயகரும் முருகனும் பரமசிவனும் ஒருவருக்கொருவர் சமமே.

## மணிமேகலை - காப்பியமரபும் சமய மரபும்

(ம. கார்மேகம், காரைக்குடி)

ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்று மணிமேகலை; சிலப்பதிகாரத் தோடு தொடர்ச்சியாக இயங்குகின்ற காப்பியம் இது. மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனாரால் எழுதப் பெற்றது என்பதை அனைவரும் அறிவர். இந்தக் காப்பியம் பின்பற்றியுள்ள காப்பிய மரபும் சமய மரபும் குறித்துக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

தண்டியலங்காரம் பெருங்காப்பிய நிலை பற்றிப் பேசும் போது,

***வாழ்த்து வணக்கம், வருபொருள் இவற்றின் ஒன்று***

*ஏற்புடைத் தாகிமுன் வரவு இயன்று*
*நாற்பொருள் பயக்கும் நடைநெறித் தாகித்*
*தன்னிக ரில்லாத் தலைவனை யுடைத்தாய்*
*மலைகடல் நாடு வளநகர் பருவம்*
*இருசுடர்த் தோற்றம் என்று இனையன புனைந்து*
*நன்மணம் புணர்தல் பொன்முடி கவித்தல்*
*பூம்பொழில் நுகர்தல் புனல்விளை யாடல்*
*தேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறுதல்*
*புலவியிற் புலத்தல் கலவியற் களித்தல் என்று*
*இன்னன புனைந்த நன்னடைத் தாகி*
*மந்திரம் துது செலவு இகல் வென்றி*
*சந்தியில் தொடர்ந்து சருக்கம் இலம்பகம்*
*பரிச்சேதம் என்னும் பான்மையின் விளங்கி*
*நெருங்கிய சுவையும் பாவமும் விரும்பக்*
*கற்றோர் புனையும் பெற்றிய தென்ப* *(தண்டி நூற்பா : 8)*

என்று கூறுகிறது. அத்துடன்

*கூறிய உறுப்பில் சில குறைந்து இயலினும்*
*வேறுபாடு இன்றென விளம்பினர் புலவர்* *(தண்டி - நூல் 9)*

*அறம் முதல் நான்கினும் குறைபாடுடையது*
*காப்பியம் என்று கருதப் படுமே* *(தண்டி - நூல் 10)*

என்றும் தண்டியலங்காரம் இலக்கணம் வகுக்கிறது.

முதலில் கூறிய நூற்பாவில் உள்ள அனைத்துச் செய்திகளையும் உள்ளடக்கியதாக மணிமேகலையைக் கருதுவதற்கு வாய்ப்பில்லை. சில குறைந்து காணப்படுவதாகக் கொள்ளலாம். அந்த வகையில் மணிமேகலையின் காப்பிய மரபைக் காண்பது பொருத்தமாக இருக்கும்.

சிலப்பதிகாரத்தைப் போல மூன்று பெருங் காண்டங்களை மணிமேகலை ஆசிரியர் அமைத்துக் கொள்ளவில்லை. முப்பது காதைகள் அமைத்துள்ளார். தண்டியலங்காரம் கூறியது போல் சருக்கம், இலம்பகம் என்ற பெயரில் இல்லாவிட்டாலும் காதை என்ற

அமைப்பு உள்ளது. சருக்கம், இலம்பகம் என்பவை பிற்காலத் தண்டியில் அமைந்தவை. எனவே தண்டியலங்காரத்தைப் பின்பற்றி மணிமேகலை எழுதப் பெறவில்லை என்பதை நினைவில் கொள்ள வேண்டியுள்ளது. எனினும் காப்பிய மரபு மணிமேகலையில் அமைந்துள்ளதைக் காண வேண்டிய கட்டாயமும் உள்ளது.

**வாழ்த்துதல்**

விழாவறை காதையில் மன்னனை வாழ்த்துகிற பகுதி அமைந்துள்ளது. கடவுள் வாழ்த்து, இயற்கை வாழ்த்து என்ற அமைத்துக் கொள்ளாமல் நேரறுயாகக் காதைக்குள் நுழையும் போது மன்னனை வாழ்த்துகிறார் சீத்தலைச் சாத்தனார்.

*முரசு கடிப்பிகூஉம் முதுகுடிப் பிறந்தோர்*
*திரு விழை மூதூர் வாழ் கென் றேத்தி*
*வான மும்மாரி பொழிக மன்னவன்*
*கோள்நிலை திரியாக் கோலோ னாகுக (விழாவறை 31-34)*

என்று வாழ்த்துகிறார். ஆயிரங்கண்ணோனாகிய இந்திரனுக்கு நடத்தப் பெறுகின்ற விழா என்பதைக் கூறி அவனுக்கு நடத்தப் பெறும் விழா முறையாக இல்லையெனில் பூதங்கள் துன்பம் செய்யும் என்பதால் தெய்வங்களையும் வணங்கச் செய்கிறார்.

*நுதல் விழி நாட்டத்து இறையோன் முதலாப்*
*பதிவாழ் சதுக்கத்துத் தெய்வம் ஈறாக*
*வேறு வேறு சிறப்பின் (விழாவறை 54-56)*

என்பது மணிமேகலைத் தொடர்.

**நாற்பொருள் :**

அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கையும் பயக்கக் கூடியதாகக் காப்பியம் இருக்க வேண்டும். அந்த வகையில் மணிமேகலை அறத்தைப் பற்றி மிகுதியும் பேசுகிறது. அறம் செய்வதற்கு வேண்டிய பொருள் பற்றியும் பொருளைப் பெற்ற வழி பற்றியும் அதனால் ஏற்படும் இன்பம், வீடு பேறு பற்றியும் காப்பிய மரபிற்கேற்றவாறு சொல்லப்படுகின்றன. ஆனால் சாதாரண உலகியல் இன்ப வாழ்க்கை என்று இல்லாமல் அறத்தின் வழிப்பட்டதாகவே இக்காப்பியம் அமைந்துள்ளது.

*மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க்கு கெல்லாம்*
*உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத் தோரே*

என்ற நிலையில் மணிமேகலை அமுதசுரபி ஏந்தியது அறத்தின்பாற்பட்ட வாழ்க்கைப் பயனைக் கூறுவது ஆகும்.

*அறம் எனப்படுவது யாதெனக் கேட்பின்*
*மறவா திதுகேள் மன்னுயிர்க் கெல்லாம்*
*உண்டியும் உடையும் உறையுளும் அல்லது*
*கண்டது இல்லென (மணிபல்லவம் 228-231)*

என்று மணிமேகலா தெய்வம் கூறுவதாக அறச்செய்தி அமைகிறது.

**தன்னிகரில்லாத் தலைவி :**

காப்பியத்திற்குத் தலைவன் வேண்டும்; அதுவும் தன்னிகரில்லாத் தலைவன் வேண்டும்; சீத்தலைச் சாத்தனார் தன்னிகரில்லாத் தலைவியைக் கொண்டு இக்காப்பியத்தைப் படைத்துள்ளார். சிலப்பதிகாரத்தில் கண்ணகி தன்னேரில்லாத் தலைவியாகப் படைக்கப் பெற்றது போல் மணிமேகலைக் காப்பியத்திலும் மணிமேகலை தன்னேரில்லாத் தலைவியாகப்படைக்கப் பெறுகிறாள்.

*மாபெரும் பத்தினி மகள்மணி மேகலை*
*தீத்தொழில் படாஅள்*

என்று கூறும் ஒரு தொடரிலேயே கண்ணகியின் மகளாகிய மணிமேகலை தீத்தொழில் எனக் கருதப் பெற்ற கணிகையர் வாழ்க்கையை விட்டுத் தவம் மேற்கொண்ட செய்தி கூறப் பெறுகிறது.

மாதவியின் மகள் மணிமேகலை என்றாலும் கண்ணகியின் மகள் என்று காட்டுவதிலே புலவருக்கு அவ்வளவு ஆர்வம் உள்ளது எனக் கொள்ளலாம். மலர் பறிக்கச் செல்லக் கூறிய மாதவியிடத்தில் சுதமதி கூற்றில் மணிமேகலையின் அழகை வருணிக்கிறார் சாத்தனார்.

*ஆடவர் கண்டால் அகறலும் உண்டோ*
*பேடியர் அன்றோ பெற்றியின் நின்றிடின் (மலர்வனம் 24-25)*

என்று கூறுவதோடு நின்று விடாமல்.

*மாமலர் கொய்ய மலர்வனம் தான்புகின்*
*நல்லின அன்னம் நாணாது ஆங்குள*
*வல்லுந கொல்லோ மடந்தை நன்னடை*

*மாமயில் ஆங்குள வந்து முன் நிற்பன*
*சாயல்கற் பனகொலோ தையல் தன்னுடன்*
*பைங்கிளி தாமுள பாவைதன் கிளவிக்கு*
*எஞ்சல கொல்லோ இசையுந கொல்லோ*

என்று மணிமேகலையின் நடைக்கு அன்னம் நாணுவதாகவும் மயில் சாயல் கற்கும் எனவும் மணிமேகலை முன் கிளியின் பேச்சு இனிமையாகுமா என்றெல்லாம் ஒரு தலைவியைப் பாராட்டுவதால் தன்னேரில்லாத் தலைவியைப் படைத்துள்ளார் சாத்தனார் எனலாம். தலைவியின் அழகைக் காப்பியங்கள்பல கணக்கின்றி வருணித்தாலும் சீத்தலைச் சாத்தனார் ஒரு சில தொடர்களில் மட்டும் தான் மணிமேகலையின் அழகைப் பேசுகிறார். பிற இடங்களில் இந்தத் தலைவி செயற்கரிய செயல்களைச் செய்பவளாகக் காட்டுகிற பகுதியைக் காணலாம்.

உதயகுமரன் என்ற இளவரசனிடமிருந்து மணிமேகலையைக் குலதெய்வமாகிய மணிமேகலை காப்பது, புத்த பீடிகை கண்டு பழம் பிறப்பு உணர்வது, அமுத சுரபியைப் பெறுவது, அதனால் அறம் செய்வது, அறம் செய்து உயிர்களின் பசித் துன்பத்தைப் போக்குவது அனைத்துமே மணிமேகலை என்ற தலைவியின் சிறப்பைத் தாங்கிப் பிடிப்பவையாகச் சாத்தனார் படைக்கிறார். ஒரு காப்பியம் என்பது நன்னெறியைப் புகட்டுவதுடன் அந்நெறியைக் கடைப்பிடித்து எவ்வாறு காப்பிய மாந்தர்கள் உயர்ந்தனர் என்பதையும் குறிப்பாகக் காட்டிச் செல்லவேண்டும். அந்த நிலையில் காப்பியத் தலைவி மணிமேகலை காப்பியம் முழுவதும் விரவிக் காணப் பெறுகிறாள்.

பூம்பொழில் நுகர்தல், புனல் விளையாடல் என்பவையெல்லாம் தலைவன் தலைவியர்க்கு உரியவை; இல்லற வாழ்க்கை இன்பத்தை நுகர்வோர்க்குப் பொருந்தும் செய்திகளைச் சாத்தனார் கூறாமல் அறவாழ்க்கைச் செய்திகளைக் கூறுவதால் மலை, கடல், நாடு, வளநகர், பருவம் ஆகியன பற்றிப் புலவர் மிகுதியும் கருதவில்லை என்றே கொள்ளலாம். இருப்பினும் நாட்டு மன்னவனைப் பற்றிப் பேசுகிறார். கங்குல் கழியில் என் கையகத்தாள் எனப் பொங்கு மெல் அமளியில் பொருந்தா திருந்தோன் முன்னர்த் தோன்றி மன்னவன் மகனே!

*கோல்நிலை திரிந்திடின் கோள்நிலை திரியும்*

*கோள்நிலை திரிந்திடின் மாரிவறம் கூறும்*
*மாரிவறங் கூரின் மன்னுயிர் இல்லை,*
*மன்னுயிர் எல்லாம் மண்ணாள் வேந்தன்*
*தன்னுயி ரென்னும் தகுதி யின்றாகும்*
*மாதவர் நோன்பும் மடவார் கற்பும்*
*காவலன் காவல்இன் றெனின் இன்றால்*
*(சிறைசெய்காதை 208,209)*

கடல் பற்றியதாக ஓரிடத்தில் சங்கு உழுது, முத்து உழுது, மோது நீர் சூழ்ந்த நீலமாக் கடல் என்ற குறிப்பையும் காட்டுகிறார். ஆனாலும் கூடப் பொழில் வருணனையும் இடம் பெறச் செய்கிறார்.
பல்வேறு வகை மலர்வனங்களைப் பற்றிப் பேசும் புலவர்,

*இருள்வளைப் புண்ட மருள்படு பூம்பொழில்*
*குழலிசை தும்பி கொளுத்திக் காட்ட*
*மழலை வண்டினம் நல்லியாழ் செய்ய*
*வெயில் நுழைபு அறியாக் குயில்நுழை பொதும்பர்*
என்று பொழில் பற்றி வருணிப்பதைக் காண முடிகிறது.

**இருசுடர்த் தோற்றம் :**
*உலகு துயில் எழுப்பினன் மலர்கதி ரோன்*
*- (கந்திற்பாவை - 190)*
*காலை ஞாயிறு கதிர் விரித்து முளைப்ப (மணிபல்லவம் - 18)*
என்று கதிரவன் பற்றிப் பேசுபவர்,

*புத்த ஞாயிறு தோன்றும் காலைத்*
*திங்களும் ஞாயிறும் தீங்குறா விளங்க*
என்று திங்களையும் ஞாயிற்றையும் ஒரோவழிச் சுட்டிச் சொல்கிறார்.

ஆக எடுத்துக் கொண்ட அறம் பற்றிய செய்தியை விளக்குவதற்குத் தன்னிகரில்லாத் தலைவியைப் படைத்தவர் காப்பியத்திற்கு எந்தெந்தப் பகுதிகள் தேவையோ அவற்றைப் பற்றி மட்டுமே சொல்கிறார் எனலாம். கிளைக்கதைகள் பலவற்றை இடம்பெறச் செய்கின்ற மரபு வட நூல்களைப் பின்பற்றியதாகக் கொள்ளலாம். மொத்தத்தில் இளமையும் நில்லாது, யாக்கையும் நில்லாது மிக்க அறமே விழுத்துணையாகும் என்ற கொள்கையை அவர் காப்பிய நோக்கமாக, மரபாக வகுத்துக் கொண்டார் எனலாம்.

**சமய மரபு :**

எல்லாச் சமயங்களிலும் புத்த சமயம் முதன்மையானது என்பதைச் சுட்டுகின்ற காப்பியம் மணிமேகலை எனலாம். அதே சமயம் குலதெய்வம் காக்கும் என்ற கோட்பாடும் உணர்த்தப்படுகிறது. குலதெய்வ வழிபாடும் வற்புறுத்தப்படுகிறது.

கடவுளைப் பிறவிப் பிணி மருத்துவன் என்று மணிமேகலை கூறுகிறது. பிறவிப் பிணி நீங்க அறம் செய்ய வேண்டும் என்று வற்புறுத்துகிறது. வினைப்பயன் தான் பிறவிக்குக் காரணம் என்று பேசுகிறது.

***வினையின் வந்தது வினைக்கு விளைவாயது (பளிக்கறை 113)***

தெய்வமோ பேயோ யாரையும் வருத்துவதில்லை உயிரை எடுத்துக்கொள்வதில்லை. அனைத்தும் வினையின் பயனே என்ற கோட்பாட்டை மணிமேகலை உணர்த்துகிறது.

***அணங்கும் பேயும் ஆருயிர் உண்ணா***
***ஊழ்வினை வந்து இவன் உயிர் உண்டு கழிந்தது***

***(சக்கரவாள 150 - 152)***

என்று மணிமேகலை பேசுகிறது. சக்கரவாளக் கோட்டம், பெருங்கோட்டம், நெடுநிலைக் கோட்டம் என்று பல கோயில்கள் இருந்திருக்கின்றன என்ற குறிப்பையும் காண முடிகிறது. நிலையாமை பற்றிய சிந்தனையும் சுட்டப் பெறுகிறது. ஆசையை அறுப்பது ஒன்றுதான் பிறவாமைக்கு வழி, ஆசையை அறுப்பதற்கு வழி அறம் செய்வதுதான் என்பது பேசப் பெறுகிறது.

***பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்***
***பிறவார் உறுவது பெரும்பேர் இன்பம்***
***பற்றின் வருவது முன்னது பின்னது***
***அற்றோர் உறுவது அறிக என்று அருளி***

***(ஊரலர் உரைத்த 64-67)***

என்று உரவோன் அருளியதாக மாதவி கூற்றில் வைத்துப் பேசுகிறார் புலவர்.

மணிமேகலை வஞ்சி மாநகர் புக்க போது அந்தந்தச் சமயத்தவர் கூறும் பொருள்களைக் கேட்டு அதன் பின்னர், பெரியோன் பிடக நெறி கடவாய் என்று அறவண அடிகள் கூறியதும் மணிமேகலை வெவ்வேறு சமயத்தவரின் கொள்கைகளைக் கேட்டு அறிகிறாள் என்பதைப் பார்க்கிறோம்.

அளவைவாதி, சைவவாதி, பிரமவாதி, வைணவவாதி, வேதவாதி, ஆசீவகவாதி, நிகண்டவாதி, சாங்கியவாதி, வைசேடிகவாதி, பூதவாதி ஆகியோரிடத்தில் அவரவர் சமயங்கள் பற்றிக் கேட்டறிகிறாள் மணிமேகலை.

*வேற்றுருக் கொண்டு வெவ்வே றுரைக்கும்*
*நூற்றுறைச் சமய நுண்பொருள் கேட்டே*
*அவ்வுரு வென்ன ஐவகைச் சமயமும்*
*செவ்விது அன்மையின் சிந்தையின் வைத்திலேன்*
*அடிகள் மெய்ப்பொருள் அருளுக என்ன*

*(தவத்திறம்... 41 - 45)*

மணிமேகலை கேட்டதும் அறவண அடிகள் தம் சமய மரபுகளைக் கூறுகிறார். பிறர் மதம் மறுத்து, தம் மதம் தருமமதம் என்று விளக்குகிறார்.

உள்ளத்தால் விளையும் வெஃகல், வெகுளல், பொல்லாக் காட்சி ஆகியனவும், சொல்லால் விளையும், பொய், குறளை, கடுஞ்சொல், பயனில சொல் ஆகியனவும், மெய்யால் விளையும் கொலை, களவு, காமம் ஆகியனவும் விலக்கி நிற்பதே தருமமாகும் எனச் சொல்லப் பெறுகிறது. நல்வினை என்பது மேற்சொல்லிய பத்து நிலையிலிருந்தும் நீங்கி நல்ல கொள்கையில் தானம் தலைநின்று வாழ்பவரே தேவராக, மக்களாக, பிரம்மராக ஆகி மேவிய மகிழ்ச்சியினால் வினைப் பயனை எய்துவர் என்று மணிமேகலை வற்புறுத்துகிறது. எனவே நல்வினை வயப்படுதலே தருமம் என்று கூறுவது தான் மணிமேகலை உணர்த்தும் சமயம் எனலாம்.

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### அறிவுடைமை

**1. அறிவுஅற்றம் காக்கும் கருவி செறுவார்க்கும்**
**உள்ளழிக்கல் ஆகா அரண்.**

அறிவு - அறிவுடைமை என்பது; அற்றம் காக்கும் கருவி - அழிவு வராமல் காக்கும் கருவியாகும்; செறுவார்க்கும் - பகைவர்களுக்கும்; உள்ளழிக்கல் - உள்ளிருந்து அழிக்க; ஆகா அரண் - இயலாத அரணாக அமையும்.

அறிவுடைமை ஒருவற்கு அழிவு வராமல் காக்கும் கருவியாகும்; பகைவர்களுக்கும் உள்ளிருந்து அழிக்க இயலாத அரணாகவும் அமையும்.

காக்கும் - செய்யும் என்னும் வாய்பாட்டு எச்சம்.

ஆகா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

**2. சென்ற இடத்தால் செலவிடா தீதுஒரீஇ**
**நன்றின்பால் உய்ப்பது அறிவு.**

சென்ற இடத்தால் - மனம் செல்லுகின்ற வழியில் எல்லாம்; செலவிடா - செல்ல விடாமல்; தீதுஒரீஇ - தீங்கினை நீக்கி; நன்றின்பால் - நல்ல வழியினில்; உய்ப்பது அறிவு - செலுத்துவது அறிவாகும்.

மனம் செல்லுகின்ற வழியில் எல்லாம் செல்லவிடாமல் தீங்கினை நீக்கி நல்ல வழியினில் செலுத்துவது அறிவாகும்.

செலவிடா - எதிர்மறை வினைமுற்று.

**3. எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு.**

எப்பொருள் - எந்தப் பொருளை; யார்யார்வாய்க் கேட்பினும் - யார்யார் சொல்லக் கேட்டாலும்; அப்பொருள் - கேட்ட அந்தப் பொருளின்; மெய்ப்பொருள் - உண்மைப் பொருளை; காண்பது அறிவு - காண வல்லது அறிவு ஆகும்.

எந்தப் பொருளை யார்யார் சொல்லக் கேட்டாலும் கேட்ட அந்தப் பொருளின் உண்மைப் பொருளைக்காண வல்லது அறிவாகும்.

கேட்பினும் - எச்ச உம்மை.

**4. எண்பொருள ஆகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்**
**நுண்பொருள் காண்பது அறிவு.**

எண்பொருளவாக - எளிதில் பொருள் உணர்ந்து கொள்ளுமாறு; செலச் சொல்லி - கேட்பார்க்கு மனத்தில் செல்லச் சொல்லி; தான் பிறர்வாய் நுண்பொருள் - பிறர்வழித் தான் கேட்கும் நுட்பமான பொருளை; காண்பது அறிவு - காணவல்லது அறிவு.

தான் சொல்வதைப் பிறர் எளிதில் பொருள் உணர்ந்து கொள்ளுமாறு சொல்லிப் பிறர் சொல்லும் நுண்பொருளைக் காணவல்லது அறிவாகும்.

**5. உலகம் தழீஇயது ஒட்பம் மலர்தலும்**
**கூம்பலும் இல்லது அறிவு.**

உலகம் தழீஇயது - உலகத்தவராகிய சான்றோரைத் தழுவி நட்பாக்கிக் கொள்ளுதல்; ஒட்பம் - நுண்ணறிவு ஆகும்; மலர்தலும் கூம்பலும் இல்லது அறிவு - அவ்வாறு கொண்ட நுண்ணறிவு மலர்தலும் கூம்புதலும் இல்லாததே அறிவாகும்.

சான்றோரைத் தழுவி நட்பாக்கிக் கொள்ளுதலே நுண்ணறிவாகும். அந்நட்புக்காக முதலில் மலர்வதும் பின் கூம்புவதும் இல்லாததே அறிவாகும்.

**6. எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு**
**அவ்வது உறைவது அறிவு.**

எவ்வது உறைவது உலகம் - உலகம் எவ்வகையால் நிகழ்வது; உலகத்தோடு - உலகத்தினரோடு; அவ்வது உறைவது அறிவு - அவ்வகையால் தானும் நிகழ்வதே அறிவாகும்.

உலகம் எவ்வகையில் நிகழ்வதோ அவ்வகையால் தானும் உலகத்தவரோடு நிகழ்வதே அறிவாகும்.

உலகம் - ஆகுபெயர்.

**7. அறிவுடையார் ஆவது அறிவார் அறிவிலார்**
**அஃதறி கல்லாத வர்.**

அறிவுடையார் ஆவது அறிவார் - அறிவுடையவர்கள் எதிர்வருவதனை அறிவார்கள்; அறிவிலார் - அறிவு இல்லாதவர்கள்; அஃது அறிகல் லாதவர் - எதிர்வருவதனை அறிய மாட்டாதவர்கள்.

அறிவுடையவர்கள் எதிர்வருவனவற்றை அறியக் கூடியவர்களாவர்; அறிவில்லாதவர்கள் அதனை அறிந்துகொள்ள மாட்டாதவர்கள் ஆவர்.

அறிவார் - எதிர்கால வினைமுற்று.

**8. அஞ்சுவது அஞ்சாமை பேதைமை அஞ்சுவது**
**அஞ்சல் அறிவார் தொழில்.**

அஞ்சுவது அஞ்சாமை - அச்சம் கொள்ள வேண்டியவற்றிற்கு அஞ்சாதிருத்தல்; பேதைமை - அறிவின் மையாம்; அஞ்சுவது - அஞ்ச வேண்டியவற்றிற்கு; அஞ்சல் - அஞ்சுவது; அறிவார் தொழில் - அறிவுடையவர்களின் செயல் ஆகும்.

அஞ்ச வேண்டியவற்றிற்கு அஞ்சாதிருத்தல் அறிவின்மை ஆகும்;

அஞ்ச வேண்டியவற்றிற்கு அஞ்சுவது அறிவுடையவர்களின் செயல் ஆகும்.

அஞ்சுவது – குறிப்பு வினையாலணையும் பெயர்.

அஞ்சாமை – தொழிற்பெயர்.

பேதைமை – பண்புப்பெயர்.

அறிவார் – வினையாலணையும் பெயர்.

**9. எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு இல்லை**
**அதிர வருவதோர் நோய்.**

எதிரதாக் காக்கும் – எதிர்வருவனவற்றை அறிந்து காக்கவல்ல; அறிவினார்க்கு – அறிவுடையவர்க்கு; அதிரவருதோர் நோய் இல்லை – நடுங்க வைக்கும் தன்மை கொண்ட துன்பம் இல்லை.

எதிர்வருவனற்றை அறிந்து காக்கவல்ல அறிவுடையவர்களுக்கு நடுங்க வைக்கும் தன்மை கொண்ட துன்பம் இல்லை.

இல்லை – குறிப்பு வினைமுற்று.

**10. அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்**
**என்னுடைய ரேனும் இலர்.**

அறிவுடையார் எல்லாம் உடையார் – அறிவுடையவர்கள் எல்லாச் செல்வங்களும் உடையவர்கள் ஆவர்; அறிவிலார் – அறிவு இல்லாதவர்கள்; என்னுடைய ரேனும் இலர் – எத்தனை செல்வங்கள் உடையவராயினும் ஒன்றும் இல்லாதவர்களே ஆவர்.

அறிவுடையவர் எல்லாச் செல்வங்களும் உடையவர்கள்; அறிவு இல்லாதவர்கள் எத்தனை செல்வங்கள் உடையவராயினும் ஒன்றும் இல்லாதவர்களே ஆவர்.

என்னுடைய ரேனும் – எச்ச உம்மை.

---

**23.03.2019 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்வில்**
**தமிழாகரர் தெ.முருகசாமி**
**கானல்வரி பற்றிச் சொற்பொழிவாற்றினார்.**

---

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்

